சிற்சிலவைகல்பாண்டிக்கொடுமுடிச்சிவஞர்பாதம்
அர்ச்சனைபுரிந்துவிண்ணேரகன்றனரந்நாட்டக்கன்
மெச்சியவேள்விதன்னில்விளைந்துறுசிவத்துரோகத
தச்சுறலொழிந்தெல்லோருமவரவரிருக்கைசேர்ந்தார். (கசஉ)

ஆதலினிதுபோல்வேறுதிருத்தலனலைசூழ்வைப்பி
லோதிடவுளதுகொல்லென்றுரைத்தனன்சூதன்கேட்டு
மாதவாமகிழ்ந்தார்பூவிலிக்கதைவழங்குவோாகண்
மாதொருபாகத்தெம்மானருடரவாழ்வர்மாதோ. (கசங)

தக்கன்வேள்விசசருக்கம் முற்றிற்று.

(ஆகச்செய்யுள சுOரு.)

## சுஎ-வது பார்ப்பதிச்சருக்கம்.

வேறு. முக்கணுயகன்பொன்னடிபோற்றியேமுயனுமாதவச்செல்வமுனி விாகா, டக்கன்வேள்விபுரிந்ததுமம்மகஞ்சார்ந்துவீரன்றடிந்ததுஞ்சாற்றி னே,மிகுகோமொழியாள்பனிமால்வரைக்கேகிமாதவஞ்செய்தவியல்பெ லாந, தொகககுழவினைதீாநிடசசொல்லுகேநதூயர்கேணமினெனச் சூதன்சொல்லுமால். (க)

வேறு. மஞசுலாவுகின்றவெள்ளிமால்வரைக்கணெம்பிரான
விஞ்சைநாதர்பலருமவந்துபோற்றுகோயின்மேவுநாள்
வஞ்சமேவுதக்கனீன்றமங்கையெனறுவையகம்
அஞ்சுருதமைக்குநாமமாறுமாறவவம்மையே. (உ)

சென்றியோகர்சித்தர்மேவுசிகரிபல்லவாயிர
நின்றுலாவுமிமயமென்னுநீண்டவோங்கன்மீதிலே
மனறல்கூடுகின்றவாவிதனறுதாமரைக்கணே
யொன்றுசுந்தரக்குழநதையாகவந்துறைநதனள. (ங)

அந்தஞான்றிலிமயவோங்சலரசனுனமாற்றவே
வந்துதோடொராயிரம்விரிந்தமாமலாக்கணே
செந்தளிர்க்கரங்கள்வீசியாட்டயாந்தசேயுறுஞ்
சுந்தரததைநாடியோங்குமோகைவாரிதோய்ந்தனன். (ச)

தோய்ந்துநெஞ்சுள்விம்மிதங்கொளோங்கல்வேந்தன்றொல்லைநா
ளாய்ந்தியான்செய்மாதவப்பயன்கொலீங்கிவ்வழகொடும்
வாய்ந்ததிப்பியக்குழந்தைதந்ததென்னமகிழ்வுறீஇச்
சேந்ததண்கரங்கொடேந்தியேயிருக்கைசேர்ந்தனன். (௫)

சேர்ந்துமேனையென்றபணிசெய்தவிர்க்கையீந்துளங்
கூர்ந்தவோகைகொண்டவன்னம்வந்தவாறுகூறினான்
றோர்ந்தமங்கலங்கொடங்குதேங்குநீரிலாட்டியே
யார்ந்தசாதகன்மநாமகன்மமன்பொடாற்றினான். (௬)

ஆற்றியன்னதானமின்னுசொன்னதானமளவிலா
தேற்றதாபதர்க்குநல்கியுவகையோடுமேந்திழைப்
போற்றிநாளொர்வன்னமாய்வளர்த்துமுக்கட்புங்கவன்
கூற்றுதைத்தசெய்யபாதமேத்தியன்புகூருநாள். (௭)

வேறு.

என்னையீன்றவள்வந்தங்கியைதலான்
முன்னைநாளினுமொய்ம்புறுமால்வரை
மன்னன்பாலுயாமங்கலவாழ்வெலா
மன்னியோங்கினமாநிலம்வாழ்த்தவே. (௮)

இன்னவாறுநிகழ்ந்திடுமெல்லையின்
மன்னுமைந்துபிராயமும்வாய்க்கவே
மின்னைநேரிடையாளுள்விருப்பொடவ்
வன்னைதந்தையைநோக்கியறைகுவாள். (௯)

ஆதியந்தமிலாதவனன்புளாக்
கோதுமுத்தியுதவுவனொப்பிலாச்
சோதியானவனின்னருடோயநான்
நீதிலாத்தவஞ்செய்யவிரும்பினேன். (௰)

தடைசெயாதுவிடைதருகென்னலும்
விடைகொடுத்தனர்மெல்லியலோர்தனி
யிடனடைந்துயரீசனையுள்ளியே
யடைவினமாதவஞ்செய்தனளன்பொடும். (௧௧)

செய்யுங்காலைச்சிறந்திடுந்தெய்வயாழ்
கையிலேந்திக்கனம்பெறுகண்ணுதன்
மெய்யனசீர்த்திவிளங்குறப்பாடியே
மையல்போக்கியமாமுனிவந்தனன். (௧௨)

வந்தனைபந்தொடிமாமுசனோக்கியே
சிந்தைதேர்ந்துவணங்கினன்செப்புவான்
இந்தமாதவநீசெயலெம்மனோக்
கந்தநன்னெறிகாட்டிடற்காமரோ. (கந)

நீயசைத்திடினல்லதுநீளசகத்
தாயுமோரணுவேனுமசைவதோ
சாயும்வார்சடையானுயர்தந்தைநீ
தாயனந்தவுயிர்கட்குஞ்சாறறினே. (கச)

ஈதுசத்தியமாதலினென்னைமே
லோதுதறருளதோங்கற்கரசன்செய்
மாதவத்தினமகிழ்ந்தவனசேயெனப்
பூதலத்தாபுகன்றிடப்போநீதனே. (கரு)

நிற்கவொன்றுநிகழ்த்துவனீணிலத்
திறகவின்கொடிருவளாகொங்கினிற்
றெககமாதவாசூழுந்திருத்தலம
மிக்கசிததிவிரைவிற்றருநதலம். (கசு)

தேவர்போற்றுந்தெளிபுனற்காவிரி
யாாவமோடுவிளங்குமருநதல
மூவர்போற்றியசெஞ்சடைமுன்னவ
னுவலோடுமமர்மகுடததலம். (கஎ)

தீர்த்தமெண்ணிறிகழ்நதிடுநற்றலம்
பாாத்தபேர்கள்பவநதொலைக்குந்தலம்
வாாதனைபல்லவழங்கியென்மாண்புறும்
மூர்த்திதீர்ததந்தலமெனுமூன்றுமே. (கஅ)

**வேறு.** அத்தலத்திற்சென்றினியதவமியறறிற்சித்தியெலாமடைவாயென்றே, மெய்த்தவஞ்சேர்யாழ்முனிவனுரைத்தகன்றனதுகேட்டவிமலையாங்கே, பத்தியொடுஞ்சென்றருள்சேர்கொடுமுடிநாயகனடிகள்பரிவிறபோற்றித்,தத்துதிரைப்பொன்னியொடுதேவதீர்ததத்துறையிற்சார்ந்துமன்றோ.

விதிப்படியேபடிந்துநறுமல்லிகையேமுதலானவிரைப்போதெல்லா
முதிக்குமுனமெடுத்திறைவன்பதமலர்பூசிததினிதினுறைநதாளிப்பாற்
கதித்திடுவெஞ்சினச்சூரபதுமன்முதற்றனவராற்கலங்கிவானோர்
மதித்ததிருமாலயனுமொருங்குகுழீஇச்சிந்தித்தார்வனத்தின்மாதோ. ()

மாதேவிதான்பிரிந்தமலையரசன்றன்னிடம்போய்வைகுஞான்றி
லாதாரமாறுமறிந்தியற்றுசிவயோகியராமந்தணர்க்கே
வேதாகமங்கள்புகன்மெஞ்ஞானமாலடியின்மேவியெங்கோ
னேதாமலோதியுறைந்தனனறக்கினுமூர்த்தியுருவங்கொண்டே. (உக)

கொண்டிறைவன்பன்னாளாண்டிருந்திடுதல்கண்டிங்குகுழுமுந்தேவர்
வண்டனெனுஞ்சூரனுயிர்வாட்டுதறகோர்வைவேலோனவருதல்வேண்டி
யெண்டிசையினுயிர்களெலாமோகமுறபபுரிமதனனென்போற்பார்த்தவ
வண்டர்பிரானுறுயோகநிலைகலைத்துவருவாயென்றறைந்தாராமாதோ. ()

அறைந்திடுசொற்கொண்டவனுமதுபுரிவேனென்றெழுந்தானவன்றேடோ
ய்வாள், இறந்தொழிவாய்செல்லாதேயென்றிடவுங்கேளாமலேகியன்றே
ன், சிறந்தமலர்க்கணையெடுத்தெம்மிறைமாாபிற்றைத்திடுமாசெலுத்தினன
ன்,குறைந்திலகும்பரமகுருமுறுவலுறீஇச்சிறிதவனையுருத்துநோக்கா. ()

நுதல்விழியிற்சிறுபொறியொன்றுய்த்திடலுமதனனுடனெய்திற்றீய்ந்தங்
குதிர்ந்ததயன்முதலுலகிறபலவுயிரும்பெண்டொடக்கறவெழிந்தபோகம்
மதிநுதலாள்ரதியிதுகண்டெம்பெருமானிருசரணம்வணங்கிப்போற்ற
நதிபுனைவோனவள்விழிகட்கவனுருவந்தோன்றவரநல்கினனல். (உச)

ஏனையவர்க்கதுமுதலாயுருவிலியென்றம்மதனனிருந்தானிப்பால்
வானவரோடுயிர்களெலாம்போகமுறீஇக்கருவுயிர்த்துவாழந்தமாயோன்
றேனுறுசெந்தாமரையோன்முதறபலருமெம்பெருமானறிருத்தாள்வீழ்ந்
து, தானவராலுறுமிடுக்கண்டீரவருளபுரிதியெனச்சாறறினரால். (உரு)

சாற்றிடுகாற்றேவியவண்டவமியற்றணினைந்துவிடைதந்தன்னோர்க்குப்
போற்றுசனகாதியரையுரைததநிலையுறைகவெனப்புகன்றுபோக்கி
மாற்றரியபெருமையுறுங்கொடுமுடியிறபொற்கொடியாண்மகிழ்ந்துகாண
நாற்றிசையும்புகழ்பனவததிருவுருக்கொண்டெம்பெருமானடந்தான்மா
தோ. (உசு)

**வேறு.** நீறுவெண்மைநிலாவினில்—வீறுதந்துவிளங்கவே
தேறுமார்புசிரந்தனி— லேறுகண்டியிலங்கவே. (உஎ)

செய்யமேனியிற்சேர்தசை— நையுநாறினினலவே
கையில்வானவர்காமலர்— பெய்யுமாரிபிறங்கவே. (உஅ)

அண்டர்வாழ்பிறையாயிரங்— கண்டகோலமெய்காட்டவே
வண்டுலாவியமாநறைப— புண்டரீகனும்போறறவே. (உகூ)

நடைதளர்ந்தொருநற்கதை— யொடிகமண்டலமொண்கையில்
கொடுகிழிந்திடுகோவண— மிடைபுனைந்திடுமெம்பிரான். (௩0)

மன்னுமுபபுரிமார்பினின்— மின்னவெம்பசியான்மெலிந்
தின்னல்கூர்பவரென்னவெம்— மன்னைகாணவந்தானரோ. (௩௧)

வாதுவீழ்ந்தவம்மாமறை— யந்தணர்க்குயரஞ்சொலாள்
சென்றைகைக்கரஞ்சேரவே— தந்தெடுத்துபசாரமே. (௩௨)

செய்திருத்தினள்செப்புவாண— மெய்திரைந்ததுமென்றனிரக்
கைதளர்ந்திருகால்களு— நைதலுற்றவிந்நாளிலே. (௩௩)

எங்கிருந்தெதுவேண்டியோ— பொங்குதுன்பொடுபோகிறீர்
இங்குமுன்னுமையேழைபாற— றங்குமாதவந்தநததால். (௩௪)

என்றுதேவியியம்பவே— மன்றுளாடியமாதவன்
மனறலார்குழன்மாதெனுமிந்— றுன்றுமோகையிறசொல்லுவான். ()

மனையும்வாழ்மனையாட்டியுந்— தனயர்சோதரர்தந்தைதாய்
விநயநட்பினர்மேவலர்— இனையாயாருமெற்கில்லையால். (௩௬)

வயிறுறும்பசிமாறவே— செயிருறும்பிரைதேடியே
யுயர்வுறும்புவியோடியே— யயருவேன்றகியாகிநான். (௩௭)
அறுகிடககவிங்காயிழா— யெதுவிரும்பிணியின்னணந்
துதிசொண்மாதவஞ்சோர்வுரு— திதயமாரவியற்றலே. (௩௮)

அன்னைதநதையரனபுடன— மனனுஞ்சாதராமறறுளோரா
இநநிலததுனக்கேவரோ— வெனனுடன்புகல்கெனறனன். (௩௯)

எந்தைநீடிமவானனை— விநதைமேவியமேனையா
மெந்தன்பேரிமையோர்புகழ்— பந்தமோவியபாரப்பதி. (௪0)

களங்கறுத்திடுகண்ணுதற்— குளங்கொடுத்துயரொண்டவம்
வளங்கொளித்தலமவைகியே— விளங்கிடச்செயன்மேயினேன். (௪௧)

கொன்றைவேணியெங்கோனெனை மன்றல்செய்திடுமாறுவந்
தின்றொராசியியம்புவீ— றென்றுகூறினளேந்திழை. (௪௨)

**வேறு.** எந்திழைகூறுமாற்றமிறையவன்கேட்டுநக்குச்
சேந்தகூர்விழியாயோங்கற்சிவபிரான்செய்தியெல்லா
மாய்ந்தினிசொல்வேனன்னேனங்கியைவிழியாக்கொண்டே
தாய்ந்தனன்மதனைக்கூற்றைப்புரங்களைக்கடுங்கோபத்தால். (௪௩)

கடுவொளிர்களத்தன்கையிற்கபாலமொன்றேந்தியுள்ளான்
சடைதனின்மதியுங்கொன்றையரவமுஞ்சலமுந்தாங்கிப்
படிபுகழ்கரத்தின்மாபிறகாதினிற்பாம்புபல்ல
வடைவுடனறரித்துவெள்ளையத்தியுந்தலையும்பூண்டு. (௪௪)

இடையினிற்புலித்தோல்யானைத்தோன்முதுகிசையப்போர்த்துப்
பொடியுறுசாம்பன்மேனிமுழுதினும்பூசியாங்கே
நடைபெறுபேய்களோடுகூடிதொருகாளையேறி
யடியரைத்தேடிச்செல்வானவனழகறையற்பாற்றே. (௪௫)

இத்தகையீசன்றனைப்பொற்பினிலிணையில்லாநீ
மெத்தவும்விழைவதென்னேயென்புகழ்விளம்புதுங்கேள்
புத்தியிற்பொறையில்வாய்மைபுகறலிற்சுசியிற்போற்றுஞ்
சத்தியிலென்னையொப்பாராருளாதரணிமீதே. (௪௬)

ஆதலாலென்னையேநீயருமணம்புரிவாயாகிற்
கோதொருசிறிதும்வாராதிருவருங்கூடிவாழ்வோம்
பேதமைமாதர்க்கெல்லாமணிகலனெனப்பேசாமற்
பூதலத்தோர்களுன்னைப்புகழுவர்காண்டியென்றான். (௪௭)

இம்மொழியம்மைகேளாததிடுக்கெனவிறும்பூதெய்திப்
பொம்மெனச்சினந்துபொங்கிப்புலனறிவிழந்தழப்போ
யென்முனின்றிந்தமாற்றமொழிந்தனையெழுந்தசீறறம்
மெய்ம்மொழிமறையோனென்றேபொறுத்தனன்விரைவிலப்பால். (௪௮)

நீங்கெனவிகழ்த்தலோடுநெடியவனேடிக்காணுக்
கோங்கலர்சழலாபெம்மான்கோடிமன்மதர்கள்கூடித்
தாங்குமோருருவாய்வந்ததகமையிற்காட்சிதந்தா
ளோங்குபேருவகைகொண்டாள்கண்டிறையுரைக்கின்றானால். (௪௯)

மங்கலவல்லிநீசெய்மாதவத்துவந்துவந்தேன்
கொங்கலரிமயமன்னன்றன்வயிற்குறுகியாங்குத்
தங்குசீர்மணஞ்செய்தற்குவேண்டுவசமைப்பாய்யாமு
மங்குவந்தினிதின்மன்றன்முடிக்குதுமறிதியென்றான். (௫0)

அறிதியென்றுரைத்தல்கேளாவடிகள்பொன்னடிகள்போற்றிச்
செறிபிழைபொறுத்திடென்றுண்மகிழ்ந்தனன்சேவுயர்த்தோன்
வெறிகமழ்மலர்க்காவோங்குவெள்ளிமால்வரையிற்புக்கா
னறியபூங்குழலாள்சென்றுபனிவரைநண்ணினாளால். (௫௧)

நண்ணியேயன்னைதாதைநறுமலர்த்தாள்களேத்திப்
பண்ணியதவமுமாங்குப்பசுபதிப்பெரியோனெய்திக்
கண்ணியவரங்கடந்தசெய்தியுஞ்சழறினாள்கேட்
டண்ணலோடம்மையுள்ளங்களிநதனரன்பின்மாதோ. (௫௨)

சுறறமோடமைச்சர்க்கூவிச்சுயம்வரநாட்டியனனோ
பெறறிடுந்தெய்வப்பெண்ணின்றிருமணம்பிறங்கவென்றே
யுற்றநல்விசுவகன்மற்கோதினானுரைத்தவாங்கே
கறறதன்வித்தையாவுங்காட்டினானவனுமாதோ. (௫௩)

எட்டுடனொன்றென்றோதுமின்மணிகுயிற்றியெங்கும்
பட்டுகள்விரிததுவாழைகமுகொடுபரப்பிச்சேநத
மட்டுறுமலர்கள்கன்னனமாநதளிரவகைகள்யாவுங்
கட்டழகுறுமாசெய்தார்கண்டவாகளிக்கமாதோ. (௫௪)

சுரரொடுநரர்களுகர்சுறறத்தார்மற்றுமுள்ள
வுரனுறுமுனிவர்யோகரப்சரரொடுபல்லோரும்
வரமுரசறைவித்தெங்குந்தூதுவர்ப்போக்கிமாண்பார்
பருவதமன்னன்றானேகயிலையிறபரவிபபுககான். (௫௫)

புக்கபின்சுபங்களெல்லாம்பொருந்துபொற்பாசனத்தின்
மைக்கிரிநிகர்மால்போறறவானவாபலருமேத்தக்
கைக்கிரிகந்தரேனைக்கடவுளர்கணாகளெல்லாந்
தொக்கினிதிருந்துசூழத்துலங்குமாதேவனறனனை. (௫௬)

பன்முறைவணங்கியேதநதப்பார்ப்பதியென்பாடன்னை
நன்மணம்புரியவினனேநயந்தடியேன்றனில்லிற்
பொனமலரடிபெயாததுப்போதருகென்றான்கேட்டு
மன்மதறசெற்றோனுள்ளமகிழ்நதினிதெழுநதான்மாதோ. (௫௭)

எழுந்தனாகணர்களோடுமிந்திரன்முதலவானோர்
பொழிந்தனர்புட்பமாரிபொருப்புறழிடபப்புததே
டழைந்திடுமுவகையோடுமுதுகினிற்றாங்கிச்செல்ல
வெழுந்தனபல்லியங்களிரட்டினர்கவரிபல்லோர். (௫௮)

சென்றனரிமயவோங்கல்சேர்ந்தனரிமவானில்லின்
மன்றலர்மேடைமீதுமணிப்பதுமாதனத்திற்
குன்றவில்லுடையான்றன்னையிருத்தினர்குறைவில்பூசை
நன்றுறச்செய்துபின்னர்நாணமலர்பபொனனிதனனை. (௫௯)

வாணியைமற்றுந்தெய்வவனிதையர்சிலரையேவிக்
காணருமழகுபூத்தவங்கயறகண்ணியாளைப்
பூணுடைபுட்பஞ்சாநதிற்பொறபுறவலங்கரித்துத்
தாபூவினிடதநிற்சோககச்சாற்றினர்தகையினமாதோ. (௬௰)

சாற்றியசுகந்தம்வீசுஞ்சத்தனத்தயிலமாட்டிப்
போற்றுசீராஞ்சனத்தாற்பூசையுமுடித்தபின்னர்ப்
போற்றியவடமீனம்மைபூங்குழலீரம்போக்கி
யாற்றியபீதவாடைமுதறபலவலங்கரித்தாள். (௬௧)

எண்ணிலாவுயிர்கடம்மையீன்றிறும்வாலையாகி
நண்ணியபரையைஞானக்கரும்பைநறறயிலமாட்டிக்
கண்ணொடுகரத்திற்றீண்டப்பெற்றதுகரையிலகாலம்
பண்ணியதவத்தாலனறோதிருமுதறபரவைமாரே. (௬௨)

இந்திரைமுதலபல்லோரின்னணமலங்கரித்தே
தந்திருவிழியானோக்கிச்சௌந்தரமென்பவெல்லாம்
வந்திவளடியிற்றாழும்வடிவுடைமங்கையென்று
ரந்தநாண்முதலாயம்மைக்கப்பெயர்வழங்கிற்றுமால். (௬௩)

வந்ததுமுகூர்த்தமென்றானமுகன்மாணோர்கூடிச
சுந்தரநாயகிப்போர்த்துயபொறபாவைதன்னை
யந்தநன்மணப்பந்தர்க்கீழழைத்தனரகிலமெல்லாந்
துந்துமிமுதலவோதைசூழ்நதனசுரர்களார்த்தார். (௬௪)

கன்னியாமூசலாடிக்கதிருமிழாதனத்தெம்
மன்னையோடமர்ந்தவண்ணலரியயன்முதலவாறோ
ரின்னிலத்தடியர்யாருஞ்சூழ்வரவிருமினென்றுன்
மன்னினர்மகவான்பன்னிதன்னொடுமகிழ்ந்தெழுந்தே. (௬௫)

திப்பியமலருநாணுமெம்மிறைதிருத்தாடனனை
யப்பினிலலம்பிதீர்த்தம்யாவருமாசமித்தே
யொப்பறுமதுவர்க்கங்களிசனுக்குதவிப்பின்னர்
மெய்ப்பருவதக்கோமானும்விரைநதுயாவிமலைதன்னை. (௬௬)

மடியினிலிருத்திவேதமந்திரம்வேதன்கூறப்
படிபுகழ்கொன்றைவேணிப்பரமனாதிருக்கரத்தில்
வடிவுறுபுனலினோடுமகிழ்ந்தினிதளித்தபின்னர்
கடிகமழ்வடிவுளாடன்கரமலர்கத்தன்பற்றி. (௬௭)

சேயபொன்றுதனத்திறதிருவுளமகிழ்ந்தமாந்தான்
மாயனோடமரர்யாருமுளமிகமகிழந்திருந்தாா
தூயமாமுனிவரோடுமினனணஞ்சுரரகளகூடிப
போயிமவரைப்பில்வைகுமப்பொறைபுவிபொருமல். (சுஅ)

வேறு. வடககணமாநிலங்
கடறகண்சாய்தல்கண்
டிடுக்கண்மேயினா
படிக்கண்வாழ்பவர். (சுகூ)

உமபரோடிறு
ரெமபிரானிடத
திம்பரோடிருந
தனபுசொல்லுவார். (எ0)

மைக்களததவா
தெக்கணத்திசை
மிக்குயாந்துவிண்
ணிற்குாயதே. (எக)

உத்தரததிலோங்
குறறவொண்கிரி
யொததசீவரோா
டத்தியாழுதே. (எஉ)

வீழுமேதினி
யாழியாழுமே
லேழையேழுயிர்
வாழுமாறெவன். (எங)

திங்கள்செஞ்சடை
தங்கவைத்தவா
பொங்குதுன்புபோக்
கெங்களீசனே. (எச)

போறறிபுங்கவா
போறறிபோதனும்
போற்றுபொற்பதம்
போறறிபோறறியே. (எரு)

என்றனைரெலா
நினறுபோறறநோா
மனறுள்வாழ்பவ
னனறுகேட்டனன். (எசு)

வேறு. கேட்டிடுமிறைவனவானோகிளாமுகநோக்கிககேளீர்
வாட்டமுறறிடுதல்வேண்டாமவண்கடறபுவிமூழ்காமற்
கோடடமறறிடுமாசெய்வேமென்றனன்குளிாநதாருளள
மீட்டுநறறவததீரெனனச்சூதனங்கிசைபபானமாதோ. (எஎ)

மாதவச்செல்வம்வாயததவண்குறுமுனியைததெனபாற
போதரச்செய்துசாயநதபுவிசமனசெயதாளெமமான
ஆதரமபெறவக்காலைபின்னர்யாமறைதுநிறகத
தீதறுமனறறசெய்திமுறறுமேறசெபபுவாமால். (எஅ)

வேறு. மாணிக்கவாதனததிறதேவியொடுமெம்மிறைவன்வதிந்தபினனர்
வாணிக்குநாவுதவுநான்முகததோன்மிகவணங்கிமகேசமூர்ததி
காணிக்கைபெறுமோமகக்கிரியையெலாமியறறவுளங்கனிவாயென்றுன் [ல்.
வேணிககணமதிபொருததோனுமதிதநதிடமுறைமையினவிழைததிட்டாறு

மறைமனுவினக்கினியவளர்த்தோமவகைகளெலாமகிழ்வினாற்றி
நிறைசருவுமாசசியநதோடோமித்துநெறபொரியுநெறியிறபெய்து
இறைவிபதந்திருககரததிறபிடிதநெடுத்தேழடிவைக்கவலததினென்றான்
குறுமுறுவல்கொணடிறையனவவாறேசெயயவுளங்குளிர்வுறறால். ()

அங்கிவலம்வந்திறைவனாதனத்திலமர்ந்திமவானாதியானோர்க்
கிங்கிதமாமொழிவழங்கிப்பிரசாதமளிககமகிழ்நதேற்றுக்கொண்டார்
அங்குறைவார்யாவருக்குந்தக்கபரிசளிததுவிடையனபிறறந்தான்
றங்கடிருப்பதிநாடிவணங்கிவிடைகொண்டமரர்சார்ந்தார்மாதோ. (௮௧)

பின்னரிமவானமேனையிருவருசகுமினியமொழிபுகனறுபெம்மான் [ற்றத்
மின்னிடையெம்பிராட்டியொடுமால்விடையினமீதிவர்ந்துமேலோர்போ
தன்னிசரில்கணாகளெலாம்புடைசூழக்கொடுமுடியாநதலனைச்சார்ந்து
மன்னுமுமையாளென்றும்வலப்பாகத்துறவைததுவைகினானல். (௮௨)

மன்றலுறுங்குழலுமையையெந்நாளும்வலம்வைத்தமாண்பினாலும்
பொன்றலிலாச்சவுநதரநாயகியெனனுந்திருநாமம்பொருந்தலானு
நன்றுதரும்பலதலத்துமிததலமேமிகவுயாவாநவைதீர்காட்சி [ரோ.
யென்றுமடியார்ககருளுமெம்மிறைவன்பெருமையெலாமிசைககறபாற்

நன்மகுடபுரியீசன்றிருமன்றற்காதையிதுநவில்வோர்கேட்போா
பொன்மகவும்புகழ்வாழ்வுமொருங்கடைந்துசிவகதியிற்புகுவாாபின்னர்க்
கன்மமலமாயையெலாமொழிந்திமாறுங்களுக்குக்கரைந்தாமெனறே
பன்மறைதேர்முனிவருளமகிழ்பூப்பச்சூதமுனிபகாந்தான்மாதோ. (௮௪)

பார்ப்பதிச்சருக்கம் முற்றிற்று.

(ஆகச்செய்யுள் ௯௮௬)

---

## ௧0-வது அகத்தியச்சருக்கம்.

---

துண்டவெண்பிறைமிலைச்சுஞ்சுடாமுடிப்பெருமான்முன்னம்
வண்டிமிர்குழலினாளைமணமபுரிஞான்றில்வானோ
ரெண்டிசைககிறைவரேனோர்யாவரும்வடபாலீண்டத்
தெண்டிரைக்கடல்சூழ்தென்பாலுயாந்ததுசிநதித்தாங்கே. (௧)

பாசிலைத்துளவனுதிபகவரும்பிறருநிறபக்
காசறுதவத்தின்மிக்ககலசமாமுனியைநோக்கி
மாசறுகுணத்தோயஞாலஞ்சமனசெயமலையநதனனி
லேசறவேகாவென்னவிறைவனேவனமீககொணடே. (௨)

தெக்கணநோக்கிமீக்கசிவாலயம்பலவுஞ்சேவித
தெக்கியமுனிவாபல்லோர்க்கினியவாமாசிகூறி
மிக்கமேலோங்குவிந்தமால்வரையடக்கிமீணடு
தொக்கவில்வலனவாதாபிவலியினைததொலைததுச்சென்றே. (௩)

பையரவணிந்தோனபோலுமாதவப்பனவனபினனாத்
துய்யதெண்டிரைநீாபபொனனிசூழிருமபுவியைசசாாநது
கொய்யலரடியிற்சிநதிககொடுமுடிநாதறபோற்றி
வையகமுய்யச்சென்றவாறுமேல்வகுததுச்சொல்வாம். (௪)

வயிரவாட்படையோன்வேணுபுரத்தினிறசிலநாள்வாசம்
செயவிரைகமழுநந்தவனந்தழைநதிடுகாலெங்கும்
புயல்வளஞ்சுருங்கிபபைங்கூழ்வளங்களுஞசுருங்கிபபொன்றி
யுயிரினுக்கிறுதியாதல்வலாரியுளளுணாநதுநொநதே. (௫)

ஆருயிாக்குயிராயவைகுமடிகள்பொன்னடிகள்போற்றிப்
பாருயிர்சகிடையூறுறறவாபகாநதிடலுமண்ணல்
போருயிாததெழுமால்யானைப்புகாமுகததவனைநோக்கித்
தேர்தமிழமுனிவனசெஙகைக்கரககாகொணாதியென்றான. (௬)

உம்பன்மாமுகச்சேய்கையமால்வரையிடைச்செனறாங்கு
கும்பமாமுனிவனசெங்கைக்குண்டிகையொருசார்வைத்துச்
சமபுவையுன்னியற்றைககடனபுரிகாலைசசாாநதே
யம்புறுகரகமீதோாசொடியெனவமாந்தானன்றே. (௭)

கணடதொனமுனிவன்போகென்றொருகரங்காட்டவேயுட்
கொண்டதுகவிழததாழ்நதியகறலுங்கோபமீககொண
டண்டனேவசாலேயாமடைத்துறுவாநீயாறறைத்
தண்டியேகுறறனென்றுதடுமெனககொடிப்பினசாாநதே. (௮)

தொடரலும்வெகுளியுள்ளநதொடருமாறிருக்கும்பாரிற
படரும்விண்ணகததின்மீதிபபடிகொடுமுடியைச்சாாநதோ
ரிடனுறவிருப்பக்கூடிக்கைகளாலிடித்துமெனறே
யடரலுங்கரிமுகத்தோன்காட்சிநனகருளினனால். (௯)

வெருவினன்கும்பயோனிவெய்துயிர்த்தடியில்வீழ்ந்துள்
ளருவினையேனின்றுடலறிவனேனுவையவெனறே
விருகணீர்கவிழ்ப்பவெநதையேவலீதெனறேரமபன்
றெருளுறதெருட்டவண்ணலடிதொழசெலலுமபோதில். (௧0)

தடிபபதறகரியபொனனிதடைவிடுதெழுமுனனீரபோன
மடுதிருகரையுக்கொணடுவருதலைமுனியனகாணு
வடுததடுததகலலெனறேதடுததிடுமானைதனனை
விடுததவளகலநோகவெகுளிதீவிடுககுமெல்லை. (௧௧)

பொன்னியுளவெருவிநினறுபொருவினமாமுனியைநோக்கி
யென்னைமுனவேட்டஞானறிலிசைத்தகுறறேவலாறறி
நன்னதியுருவந்தாங்கிநனுகுவனெனச்சொறறேன்மற
றன்னதறகனிச்சைதநதையநீயறியாயபோல. (௧௨)

இறைறனான்றிமயவல்லிபங்கினேனவன்மீக்கொண்
டொறறைவெண்கோட்டுபபுத்தேளொருகொடிவடிவந்தாங்கி
முற்றுறவினழைத்தவாறுங்கணடனைமுனிவதெனனொ
மற்றிதறகடியேனார்றுங்குறையிலைவழங்குகென்றாள். (௧௩)

இன்னணமபொன்னிமாற்றமிசைப்பமுன்வேலையுண்டோன
மின்னவிரசடையோற்போற்றவிரைந்துசெல்காலைஞாலந
தன்னடியவர்க்குமிக்கதலசதியபெறிததல்வேண்டி
முன்னவனவிநோதமொனறுமுனிவனமுனனியறறலுற்றான். (௧௪)

விரிதிரைசப்பொனனிபோகவிளையமுற்றினமெனறினறேன்
பரிவுறப்போதுகின்றனபாதலததடைதுமெனறே
யிருநிலததிழிதல்காணுமுனிவரனேநங்கிமாழகிப
பிரிவுறுவகைசெங்கையாறபிடிததனனபிடிககுணின்றன. (௧௫)

நிறறலுங்கும்பயோனிநெடிதுயிரததடியில்வீழ்நது
முறறவமில்லேன்பொல்லேனமுனபுறுதிதுவிளைததா
யற்றைஞான்றடியேன்மனறல்காணுறறகறறியின்னே
பற்றிலெனெதிராநிலாதிப்பரிசினைபபுரிநதாயபோற்றி. (௧௬)

**வேறு.** வானந்துதேவர்தெரிதநதவேதமனுவின்கணீறில்பொருளாய்
நாநந்துயோகரிதயங்களானநளினந்தவாதவொளிநீ
யூனந்துமீனவுடனின்றுலாவியுழல்கினறதீயவினையேன்
யானனபிலாதகொடியேன்கணுடலெளிதோநிறுடலிறையே. (௧௭)

மழையூடுநீடுவரையூடுவேகவளியூடுகானல்வனமூ
டழலூடுகூடுதவவாணர்தேடியறியாதஞானவொளிநீ
பழியூடுகாமவழியூடுபேசுபடிறூடுநீடவறிதே
யிழிபாவியாவிவிழியூடுகாணவெளிதோன்றுடலிறையே. (கஅ)

பூதங்கடந்துகரணங்கடந்துபொறியுங்கடந்துகடவா
நாதங்கடந்துவெளியூடுநின்றுநடனங்கடந்தவொளிநீ
வேதங்கடந்தவிமையோர்கடந்தமவினையுங்கடந்தபெரியோ
யேதங்கடந்தவெளியேன்கணூடலெளிதோன்றுடலிறையே. (ககூ)

ஒன்றன்றிரண்டுபொருளன்றுமூன்றுமுருவன்றுநான்குகரணம்
பொன்றைந்துபூதமறையங்கமாறுபொழிலேழெணயோகமுடனே
மின்றங்குஞானவடிவானபதன்றுவெளியன்றுமேலையொளியன்
றென்றென்றுநின்றபொருளென்கணூடலெளிதோன்றுடலிறையே. (உ0)

அறிவாலறிந்தவறிவுங்கடந்தவறிவாலறிந்தவறிவிற
பிறியாதிருந்துதுயில்வோர்முகந்துபெரிதேயருந்துநறைநீ
பொறிவாயிலைந்துநெறிபோயுழன்றுபுரையோடிருந்தபயனோ
வறியாதபுன்கணுடையேன்கணூடலெளிதோன்றுடலிறையே. (உக)

வேறு. துனிவரமுனிவனுள்ளம்பணிப்புறத்துதிப்பத்தூய
பனிவரைபயாதவல்லிபங்கினனொருவனுன்பா
லினியதோர்விளையாட்டிவ்வாறியற்றினமிருநீர்ஞாலங்
கனியுமன்புடைமையோராபாறகலப்பதையறிதலவேண்டி. (உஉ)

ஒல்லையிற்போதுமபொன்னியுழியெழுவெகுளித்தீயிவ்
வெல்லையில்விடுகென்றேதவிருகரமுகிழத்துநின்றே
யல்லுறழ்கனேடத்தாயனின்னுமதியினறிபபோநதாண்
முல்லையெனனகையாளென்றம்முனிவரனமொழிநதானமாதோ. (உங)

பகாந்தமாமுனியைநோக்கிப்பல்லுயிர்தொகையுய்மாறியா
மகமகிழ்ந்தழைப்பப்போந்தாட்கரிலுண்டேயென்றபோழ்தின
மகிழ்ந்தடிவணங்கியெந்தைதிருவுளமகிழச்சிக்கேற்பி
ணிகழ்ந்திடத்துணிவனேயென்றிதயத்தினவெகுளிதீர்ந்தான. (உச)

ஏந்துமுனவெகுளிதீர்ந்தமுனிவனையிறைவனோக்கிப்
போந்தவிப்பொன்னிலோபாமுத்திரையெனுமபேர்பூண்டு
கூர்ந்துநின்பணிகளாற்றக்கோந்தியுருவந்தாங்கிப
பாந்தண்மேனஞாலமகாப்பப்பணித்திடுகெனச்சொல்காலை. (உரு)

பிலத்தெண்டிரைக்காவேரிபிறைநறுங்கண்ணியோனைப்
பல்விதத்திறைஞ்சிவீரைபருகுமாமுனிவன்றனிற
புல்குமாமலர்சடுவிப்போற்றலுமவ்வொருவலேற்றோன்
சொல்லியவாறுகிற்றியெனப்பினுஞ்சொல்லலுற்றான. (௨௬)

பொய்களவாதிதீர்ந்தபுனிதராயாவரேனும்
மொய்யலாதுவிதினபாலாடினோர்முத்தராவார்
கையினொருமுறைபிழந்துங்கடிபுனலருந்தினோரு
மெய்யுறப்புரோக்கித்தோரும்விமலனதுருவஞ்சாவார். (௨௭)

தண்ணறும்புனல்பாயபைங்கூழ்விளைதடஞ்சாலியாதி
யுண்ணுமன்புடையோர்பாவமொழிந்தரனுலகில்வாழ்வார்
மண்ணிடையளவிறீர்த்தம்வாதுவல்வினைகடீர
வண்ணிநின்றுமென்றானினதியலதைக்கற்பாற்றே. (௨௮)

மறைவழியொழுகியாடினோர்க்கருள்வழங்கிநாளும்
பொறையணியுடையையாய்நற்புனிதமேற்கொண்டுகண்டு
கறைமணிமிடற்றன்கோயிற்கரைதொறுமபூசையாற்றி
யுறைகுதியென்றேதும்பமுனிவரனுரைக்கலுற்றான். (௨௯)

விளம்பியமுனியைப்பொன்னணிமீளவும்போற்றியைய
வுளம்புரிபுனிதமேற்கொண்டுவந்துநீர்ப்படிந்தோராரு
மிளம்பிறைமௌலிதாளிலடைவரென்றனையிதோர்ந்து
வளம்பெறவேண்டியிவ்வாறருளினையேனுமன்றே. (௩௰)

கோறல்களுண்டல்களவல்குருநிந்தைபொய்ம்மையுற்றோர்
வேறிந்தறியாதாற்றும்வெய்யமாபாதகத்தோ
றேறுமசுத்ததோர்களாடினுமுய்ந்துவேதன்
பேறுறவளித்தியென்னக்கொடுத்தனனபெருந்தவத்தோன். (௩௧)

கொடுத்தபின்முனிவர்கோமான்கொடுமுடிநாதற்போற்றி
யடுத்தவெனபிழைபொருத்தாளென்றனன்றதிபூண்டோன்
றொடுத்தபல்வரங்களன்னோர்க்கீந்தனன்றுகளில்சீர்த்தி
யெடுத்திடுமகத்தியன்றனமலயம்புக்கினிதிருந்தான். (௩௨)

ஆயபின்காவிரிப்பேருஞ்சுரநதியாளாங்கு
மேயதன்கலைகண்முற்றும்விளங்கிடப்பெருகிமேலோன்
றூயசேவடிகள்போற்றிச்சென்றுசோணாட்டிற்புக்குப்
போயுயர்மலர்க்காவுற்றுள்பூமழைசுரர்கள்பெய்தார். (௩௩)

மாற்றருந்தவத்தீர்பொன்னிமாநதிப்பெருமையாவுஞ்
சாற்றுதற்கெளிதோவிந்தத்தலனதிற்சிறசகும்பொன்னி
யேற்றவிக்கதைமுற்றுமெழுதினோர்படித்தோர்க்கெல்லாங்
கூற்றுதைத்திட்டவெம்மான்றிருவருள்கொடுக்குமென்றே. (௩௪)

அகத்தியச்சருக்கம் முற்றிற்று.

(ஆகச்செய்யுள் எ௨௩.)

## ௧௧-வது தேவதீர்த்தச்சருக்கம்.

வேறு. தூயமாமுனிவரைநோக்கிச்சூதனங்
காயவானவாதருநதீர்த்தத்தாடுவோர்
தீயபாழ்வினையெலாங்கணத்திறநீாவரென்
றேயுயர்கதையுமங்கிசைத்தன்மேயினுன. (௧)

முன்னைநாட்காசிபன்முயங்குகோதையர்
பின்னைநேரிடையுளாடிதியுமேன்மைசேர்
பொன்னனாளதிதியெனறிருவாபொறபுடன்
றுன்னவீன்றனர்சுராசுரர்கடம்மையே. (௨)

தம்முளேயிருதிறத்தார்களும்பகைத்
தெம்மதேதுறக்கமற்றெம்மதென்றுளம்
விம்முபோர்செய்தபின்விரைகொடாமரைச்
செம்மலரோனெடுநதிருவினுதனே. (௩)

இவ்வழக்கொழித்திடீரென்னவனனவர்
வவவிடுநதேவரேதுறக்கம்வாழகவத்
தெவ்வர்பாதலத்தினிறசேர்கவென்னநெஞ்
சவ்வியந்தழைக்கவவ்வசுரர்போயினுர். (௪)

அசுரர்களறுபதோடாறுகோடியர்க்
கிசைபெறுசுக்கிரனியம்புவாணிவண்
வசையறுதுறக்கமேயுயர்வம்மாயனும்
பசியசெங்கமலனும்வஞ்சமபண்ணினுர். (௫)

நீவிரெல்லீரும்பாதலத்தினின்மிரு
ருவலோடங்கிருந்தமயமபாதனமைத்
தேவுலகேறுமேவனென்றுசெப்பிவிண்
மேவினனவாகுருவானவெள்ளியே. (௬)

மேகவாகனனபினாத்துறக்கமேவியே
மோகவானவாகுழாஞ்சூழ்ந்துமொய்த்திட
வேகவங்கியன்முதலோர்க்குமவேறுவே
றுகவேழ்திசைகொடுத்தனபிறபோகியே. (௭)

கற்பகத்தருநிழலமாந்துகாகுழற்
பொற்பினெரோடமிருபோகந்துயகருநாண
மற்பெறுஙகோடுநானகுன்ளவாரணத்
திறபொலிந்தொருபகலிலிதிறபோந்தனன். (௮)

தேவரம்பையர்நடந்திகழத்திங்ஙூரற்
பாவைமாரமஙகலம்பரிவிறபாடமே
லாவலார்சாபமரையிரட்டவன்பினிற
காவலனபவனிபோதருமக்காலையில். (௯)

சிறறமெயுருவெனத்திகழுஞ்சீருளான
கூற்றுமஞ்சிடுதவத்தாறறல்கொண்டுளான்
போறறுவாககருணமிகபபுரியும்பொறபுளான்
நீறறுமேனியறருள நிறையுமனபுளான. (௧௦)

**வேறு.** சிவனைநேர்துருவாசனும்பெயரினனசெறிந்த
தவமிழைத்திடுமுனியராககரசெலுந்தகையோன்
உவகைபூத்தொருதினந்திருக்கயிலைசெனறெளிரும்
பவனெனும்மகதேவனேடுமைபதமபரவி. (௧௧)

தேவியீந்ததோரநறுமலாததெரியல்செங்காத்திற
றுவியங்குநின்றுமபாகோன்வாழ்பதிசாாநதே
யாவலுறறயிராவதப்பிடரிமேலழகார்
தேவர்கோனவருபவனிகண்டருகினிற்சென்றுன். (௧௨)

சென்றவன்றனைமதித்திலன்மகபதிசெருக்கா
லினறெதிரந்தவனகரத்தினிணிகரிலாததெரியல்
தன்றுமன்பினுறகொடுத்தலுநதோட்டியிலேறறு
மனறல்கூரயிராவதத்தலையினிலவைத்தான. (௧௩)

வைத்தமாலையைப்புழுக்கையெனமதகரியெடுத்தே
யொத்தமண்மிசைவைத்துமகன்களாதுழக்க
வத்தனம்பிகைக்கன்புசேர்முனிபுறுகாறுச்
சித்தசன்றனைக்காய்ந்தவன்முனைக்கினைந்தான். (கரு)

எரியெழுந்ததுவிழிகளில்விண்மிசையெழிலி
கரிபோழிந்ததுகதிர்மதிகலங்கினகனல்சேர்
பொரியெழுந்தெனவுடுவினமுதிர்ந்தனபுவியெண்
கிரிகளுங்கரியெட்டொடுமிடுமிடுத்தனவால்.

கடல்கொதித்ததன்வயிற்றுறுவடவையாங்கனலும்
படபடத்ததுபார்த்தனாவிண்ணவர்பயந்தார்.
முடிபொறுத்திடுவலாரியைப்பார்த்தெதிர்முனிந்தே
யிடிமுழக்கெனவிரைந்திதுமுனிவிர்னிசைக்கும். (கசா)

கிட்டுதற்கரிதாந்திருக்கைலையிற்கிடைத்த
மட்டுறுந்திருமாலையான்மகிழ்ந்துனக்களித்தேன்
இட்டமுறறதையேறறிடாதின்னைமிழித்தாய்
பொட்டெனக்கணத்தழிகநின்வாழ்வெலாம்பொன்றி. (கஎ)

உநதருட்சியும்பகைவராமவுணருக்குரித்தாய்ச்
சிந்தைநொந்துநீதிரிகெனச்சபித்தனன்சென்றன
வந்ததீவினைநினைந்துளமவெருண்டனன்மகவான்
எந்தநாளிதுதீர்வதெனறெண்ணினனிருநதான். (கஅ)

விளைந்தவிச்செயல்யாவையுமுள்ளினுன்வெள்ளி
யுளந்தனிறபெருகுவகைபூத்தாக்காபாலோடித்
தளர்ந்திடாமலித்தநியினீாசுரநகாசார்நதே
வளைநதுகாமனைத்துரத்துமினென்றனன்மகிழ்ந்தார். (கசு)

மகிழ்ந்துபோந்தனாதுறக்கநாட்டிந்திரன்மலைநதே
யகந்தளாந்துபின்னிடைந்தொளித்தோடினனசுரர்
சுகந்தருஞ்சுராலயமுகைகொண்டனர்சுருக்கிற்
சுகந்தனிற்சுராவருநதினர்கொள்ளைநாளசரித்தார். (உ0)

சரித்தபின்சுரகுருவிடஞ்சாற்றினர்தகையாற்
பரிந்துவியாழனன்னவர்முகம்பார்த்திதுபகர்வான்
விரிந்துராக்சடையெம்பிரான்றிருவருண்மிகவே
பொருந்துமாறுசென்றினிதினிற்பூசனைபுரிவீா. (உக)

வேறு.

பூதலத்துளோர்பெற்றுகொள்ளவிற்
சீதளப்புனல்சேர்ந்தபொன்னியா
ளாதரத்தொடேயவிருவற்றலம்
மாதவத்தரேவதியும்வண்டலம். (உஉ)

சீர்கொள்பொன்வரைச்சிகரமொன்றதா
ளேர்கொள்வாயுதானெறியவீழ்ந்தெழிற்
பார்குழிந்ததன்குடுமிபன்னவன்
பேர்கொளிங்கமாய்ப்பிறங்குமொண்டலம். (உங)

அத்தலத்தினீரடைவிற்சென்றுயர்
கத்தன்பூங்கழல்கருதியேத்தியே
யொத்ததீவினையொருவியொன்னலார்ச்
செற்றுவிண்ணகர்சிறப்பினெய்துமின். (உச)

போமினென்றனகேட்டபுங்கவர்
பூமினாயகன்போதனோடுசென்
றேமமோவிலாதுஞற்றுமொண்டவர்
சேமவைப்பெனுந்தலனிறசோந்தனர். (உரு)

சோர்ந்துபோற்றினரீசன்சிந்தையுட்
கூர்ந்தவோகையாற்குழுமிநீவிர்சென்
றார்ந்தபாற்கடல்கடைவிராயினிங்
கோர்ந்தவாழ்வெலாமுறுவிரென்றனன். (உசா)

ஈதுகேட்டபின்னேமிமந்தரப்
பூதரந்தனைப்புணரியுண்ணிறீஇ
யோதுவல்விடத்துரகவேந்தனைத்
தீதில்நாணெனச்சேர்த்தபின்னரே. (உஎ)

உம்பரோடவர்பகைவரொன்றிநின்
றம்பரந்தனைக்கடையவாயிடை
வெம்புமாவிடம்பிறந்துமேலெழுந்
திம்பர்வாழுயிர்யாவுமேங்கவே. (உஅ)

வாட்டமேனிகள்கருகிவானவர்
ஓட்டமுற்றரன்றிருமுனேகினர்
நாட்டமூன்றுடையான்நகைசெய்தவ்விடம்
கூட்டியுண்டனோர்க்குயிர்கொடுத்தனன். (உகூ)

கொடுத்தபின்முனிர்கடைக்துகோநிலா
தடுத்தவெண்சுதைகிடைத்தயின்றனர்
கடுத்தவெங்கறையெரித்தகாழ்ப்பிறு
லெடுத்தால்லுடல்கறுத்ததெண்ணினர். (௧௦)

எண்ணியேயிதற்கென்னேநாமினிப்
பண்ணுவேமெனுப்பரிந்தநின்றபோ
தண்ணலாரருள்கூட்டவாயிடை
விண்ணிலோர்மொழிவிரிந்தெழுந்ததால். (௧௧)

அஞ்சலஞ்சல்வானமரரஞ்சிரீர்
நெஞ்சமேங்கலேனெடியமால்வரைக்
குஞ்சிலிங்கமாய்க்குலவுமொண்டலம்
மிஞ்சுமாதரத்தோடுமேவுமின். (௧௨)

மேவியங்கொருவிரைகொள்மாமலர்
வாவிதொட்டதின்மகிழ்வின்மூழ்கினுற்
றுவுகாரியாலுடலிற்சாரகறை
யோவுமுண்மையீதுணர்மினென்னவே. (௧௩)

என்னுமம்மொழிசெவியிலேற்றுளம்
துன்னுமோகையாற்சுரர்கள்சென்றுதண்
பொன்னிமேல்கரையதனிற்பொற்புறும்
வன்னிமாநிழல்வைகுமெந்தையை. (௧௪)

ஆடுமெந்தையையம்மைகந்தனைக்
கூடுமெந்தையைக்கூனல்வெண்பிறை
சூடுமெந்தையைத்துகளில்கோடிகை
கோடுமெந்தையைக்குகனையேத்தினர். (௧௫)

**வேறு.** கோட்டமில்குணத்துத்தேவர்யாவருங்கூடிப்பின்னர்
வாட்டமில்வன்னியின்கீழ்வளனுறுவாவிதோண்டப்
பாட்டளிதுதைந்தகொன்றைத்தாருளான்பணித்தவாற்று
ளூட்டியர்தீர்த்தம்யாவும்வந்தவணணுகிற்றன்றே. (௧௬)

புண்ணியப்புனல்களெல்லாம்வந்ததிற்புகுந்தபின்னர்
விண்ணவருவகையோங்கவிரைந்தினின்மூழ்கலோடு
மெண்ணுறவிடத்தானேர்ந்தகருமைவிட்டிலங்குபொன்னிற்
புண்ணியவுருவின்மிக்கவெழிலுருப்படைத்திட்டாரால். (௧௭)

படைத்தபின்னுவகையுள்ளம்பெருகியபரவைபோல
நடித்தனர்குதித்தாரோடிநயந்தனர்வியந்தாரின்றே
வடித்திடுமமுதமென்னப்பழமறைமறுக்கொண்டெம்மா
ண்டிக்கமலங்கள்போற்றியாடினார்பாடினாரால். (கூஅ)

வேறு. அருவுருவாயகிலசராசரப்பொருள்களௌவற்றினுநின்றாகாயத்திற்
பெருகுபுனலொளிராலங்கட்டியெனத்தடித்திடல்போற்பிரிவிலாமெய்த்
திருவருளேயுருவாகிவடிவுடையாள்வலப்பாகந்திகழமண்மேல்
முருகுவளர்பொழிறபாண்டிக்கொடுமுடியிலீசனுமாமுதலேபோற்றி. ()

ஒருதுணையுமில்லாதார்க்கூறெல்லாந்துணையென்பாருலகராங்கே
வருதுணையுமில்லவர்க்கோமெய்த்தெய்வந்துணையென்பாவார்த்தை
பொய்யோ, பெருந்துணையாயுந்தனிருந்திருப்பாதம்பற்றுமெமைப்பிரியாதின்
னா, ளருகிலணைதருள்புரிந்தாய்திருப்பாண்டிக்கொடுமுடிவாழரசேபோ
ற்றி. (சO)

அசரமுடன்சரமானவேழுவகைத்தோறறத்துடளப்பில்காலம்
வசையுறுமீரிருயோனிவழிபுகுந்துகறங்கேபோன்மாறியோடி
யிசைபெறுமுன்னின்னருளாறசுரவுருவாயிப்பிறவியெடுத்தேமெந்தாய்
பசியநிறவடிவுடையாளொடுபாண்டிக்கொடுமுடிவாழ்பரனேபோற்றி. ()

பிறப்பித்தாற்பிறக்கின்றேமிறப்பித்தாலிறக்கின்றேம்பெரியோய்நின்றாண்
மறப்பித்தால்மறக்கின்றேம்நினைப்பித்தானினைகின்றேமாயேயத்திற்
சிறப்பித்தாற்சிறக்கின்றேம்செயலெல்லாமுன்னதலாற்சிறியோங்கட்கே
தறப்புத்தேள்தனைப்பரியாக்கொள்பாண்டிக்கொடுமுடியிலமலாபோற்றி.

தவறெல்லாமியற்றுவதேசேயர்களுக்கியல்பாகுந்தந்தைதாயர்
புவியிலதுபொருப்பதலாற்கடிந்தொறுததல்வழக்காமோபுகலாயிந்நாட்
பவமகலப்புரிநதெம்மையாட்கொள்ளல்நின்றனக்கேபரமாங்கண்டா
யவலமறுத்திடுபாண்டிக்கொடுமுடிவாழ்பசுபதியேயமலாபோற்றி. (சங)

அத்திமுதலெறும்பீறுயெவ்வுயிர்க்குந்துயர்புரிதலகற்றிப்பண்ணுட்
டுத்தியஞ்செய்துன்னருளின்வழிநின்றுதவமியற்றுந்துயோர்களெய்தும்
சித்தியெலாமித்தலத்தைத்தரிசிப்பார்க்கெய்துமெனல்தேற்றற்கன்றோ
சத்திவடிவாம்பிகைக்குன்வலப்பாகங்கொடுமுடியிற்றந்தாய்போற்றி. ()

மூலமலத்தொடக்கதனுற்றனுகரணபுவனமதின்மூழ்கிப்பன்னுள்
நாலுவகையோனிகளிலேழுவகையாய்ப்பிறந்துநல்லூழீர்க்கத்
தாலமிசைப்பருப்பதிவுவிளக்கியுமுன்கழனிலையாச்சமழக்கரானேம்
கோலமுறுமோருருவத்திருப்பாணடிக்கொடுமுடியிற்கொண்டாய்போற்றி

முப்பொருளுள்நற்பொருளாயிருபொருளையியக்குவிக்குமூத்தோனுகிப்
பொற்புறுசிறக்கனவடிவாய்ப்போகமுடன்யோகமுயிர்பொருந்தச்செய்யும்
பெட்புறுசெங்கதிரொளிபோற்றுதான்மியசத்தியொடும்பிறங்கிமண்மேல்
மெய்ப்பொருளாய்த்திருப்பாண்டிக்கொடுமுடிவாழெந்தையெனும்விமலா
போற்றி. (சக)

அருவுருவாயுருவமுமாயருவமுமாயிவைமூன்றுமல்லானுகிக்
கருவுலவாவருளுருவாயெம்போல்வார்கருமேனிகழிபானவானிற்
றருவுநிதிமறைமுதலாமெப்பொருளுமுவமைசொலததகாதவீகைத்
திருவுடையார்வளர்பாண்டிக்கொடுமுடியில்வரதந்திகழ்வாயபோற்றி.

காமமொடுசினலோபமோகமதமாச்சரியங்கடுநோடம்ப
மேமுதலாந்துர்க்குணங்கள்விளைகழனிமேதைதசைமிகுபுன்கூடாய்த்து
தீமைபலகுடியிருக்குமுடல்சுமந்தேமெமக்கருள்செய்திடுவாய்தீஞ்சொற்
பாமணக்கும்புலவர்வளர்திருபபாணடிக்கொடுமுடிவாழ்பகவாபோற்றி.

அருளில்லேம்பொருளில்லேமறிவில்லேம்பொறியில்லேமகந்தையுள்ளேம்
கருவுள்ளேமிருளுளளேமருளுள்ளேந்திருகுள்ளேங்கயமையுள்ளேம்
அருவுள்ளேமுருவுள்ளேமன்பில்லேம்வம்புள்ளேமசடரானேம் [ற்றி.
திருவுளளார்திருப்பாண்டிக்கொடுமுடியாய்யாங்களுயச்செய்வாய்போ

வேறு. இன்னணந்துதித்துத்தேவர்மகிழ்வுறீஇயிருக்குங்காலைப்
பொன்னவிர்சடையான்வெள்ளிப்பொருப்புறழ்விடைமீக்கொண்டே
யன்னவர்தமக்குக்காட்சியளித்தபினருளிச்செய்வான்
பொன்னகருடையீர்நீவிரமைத்தவிப்புனல்வாவிக்கே. (ருo)

திங்கறுதேவதீர்த்தமெனும்பெயர்திகழப்பூமேற்
றேங்குநற்றீர்த்தமெல்லாம்வந்திதிற்செறிகவுன்பாற்
பாங்குடன்படிவோர்பாவமொழிந்துநம்பதத்திற்சேர்க
வோங்கியவினைகள்யாவுந்தீர்ந்துநீருய்கவென்றே (ருக)

வரம்பலவுதவிச்சென்றான்வானவர்மகிழ்ந்துபின்னைப்
பரம்பரனடிகள்போற்றிப்பாற்கடற்சென்றுகூடி
யுரம்பெறுமமரர்தாங்கடலமிர்தமுதிக்கவுண்டே
முரண்டருபகைகள்செற்றுமொய்ம்புறுமறக்கம்புக்கார். (௭௫)

வாழ்ந்தனரிருந்தார்தெய்வவாவியின்மகிமைகேட்டோர்
ஆழ்ந்தவத்தேவதீர்த்தத்தன்புடன்படிந்தோர்கண்டோர்
தாழ்ந்தசெஞ்சடையெம்பெம்மான்றண்ணருள்பெறுவரென்றே
யாய்ந்துமாமுனிவர்கேட்பச்சூதனங்கறைந்திட்டானால். (௭௬)

தேவதீர்த்தச்சருக்கம் முற்றிற்று.

(ஆகச்செய்யுள் ௭௬.)

## ௧௨-வது பாரத்துவாஜச்சருக்கம்.

வேறு.

வேதனுத்தொனிர்சூதனும்விண்ணவர்
காதலிற்றருதீம்புனற்காதையை
ஓதிகற்பரதவாசனென்காதையும்
மாதவத்தர்வியப்பவழுத்துவான். (௧)

கரையிலாகமமெய்ப்பொருள்கண்டவன்
உரைசெய்நான்மறையொண்பொருளாய்ந்தவன்
புரையின்மாதவத்தாலுயர்வுற்றபொன்
வரையைநேர்பரத்துவாசனென்மாமுனி. (௨)

எண்ணில்காலமிருந்தவமாற்றியெம்
மண்ணல்வாழ்தலமாயிரமன்பினால்
நண்ணியேத்திநறும்பொழிற்கொங்கினிற்
றண்ணுலாவுபுனற்கரைசார்ந்தனன். (௩)

சார்ந்துவன்னிநிழல்வளர்சங்கரன்
சேர்ந்தபூங்கழல்சிந்தித்தருளினான்
பாய்ந்தபொன்னிபடிந்தனன்பைம்மலர்
ஆய்ந்துகொண்டங்கருச்சனையாற்றினான். (௪)

வேறு. அந்தியேயிருகரங்குவித்திறைஞ்சினனன்பாற்
போற்றினனிருகண்களினீருகுவிற்பொழிய
மாற்றினேன்பவவினைத்தொடர்பென்றனன்மகிழ்ந்தங்
கேற்றகாயிலையனுற்றினன்யோகிகட்கிறைவன். (௫)

சென்றனன்சயிரிழலம்புலச்செருக்கறுத்தே
குன்றுபோலுடல்சலிப்பறவிருகையுங்குவிய
மன்றுளாடியபொன்மலர்க்கழலிணைமதித்து
நின்றனன்சுரர்நரரெலாம்புகழ்தவநிலையில். (௬)

இன்னணந்தவநிலையினிலீராறுதிங்கள்
மன்னிநின்றமாமுனிவரனன்பினைமதித்துப்
பொன்னவிர்ந்தநீளசடாடவிப்புனிதன்போர்விடைமேல்
மின்னனாளொடுமிவர்ந்தனன்வரந்தரவிரும்பி. (௭)

கோடிசெங்கதிர்குழுமியோருருவுகொண்டெனவிண்
ணீடுகாந்தியாலமரருமிமைத்தெதிரொருங்கப்
பீடுசால்முடிதனிலதிகொன்றையும்பிறையு
மாடுநாகமுமயனமுகங்கவிழவேயவிர. (௮)

வந்துமாமுனிக்கெதிரினிற்காட்சியையவழங்காச்
சிந்தையோருந்திருகரங்களுஞ்சிரததினமீக்குவித்து
இந்தநாளடியேனனியுய்ந்தனனெனவே
சந்தமாமறையாற்றுதிபுரிந்தனன்றக்கோன். (௯)

வேறு. அரகரசிவசிவவம்பரனேயரிசரியுரிவிடையம்பரனே
திரிபுரநொடிதனிலட்டவனேசிரமொருசிலையடிபட்டவனே
முரகரிபெறவருள்சக்கரனேமுருகனையுதவியசக்கரனே
வடமதுகொடுதடுதெனையாள்பவனேவளமுறுகொடுமுடிவாழ்பவனே. (௰)

வணங்கிலர்பவமறைக்காதவனேவணங்கினர்முகமரைக்காதவனே
இணங்கரவம்புலியுடையவனேயிடையினிலும்புலியுடையவனே
அணங்கினுக்குயர்வலமளிப்பவனேயள்வறுகதிரெனவொளிப்பவனே
பண்மறைதயனைரயினில்முடிப்பவனேபகைவரைவிரைவினின்முடிப்பவனே.

முனிவர்கள்தெரிபொருள்விரிப்பவனேமுனமரிமகனுடலெரிப்பவனே
கனிகரிமுகவன்கைகொடுப்பவனேகருவியகமனுயிர்குடிப்பவனே
பனிவரைமகளொடுநடிப்பவனேபணிகுநர்வினையறமுடிப்பவனே
குன்றிலெனவரைவளைப்பவனேகொடுமுடியெனுநகர்நிலைப்பவனே. ()

வேறு. அடியனைப்புரப்பாயென்றங்கருமறைமுனிவன்பல்காற்
படிமிசைவீழ்ந்துபோற்றிப்பழிச்சுதல்பரமன்காணூ
முடியதுளக்கியாதுவிழைந்தனைமொழிதியென்று
நெடியவற்கரியோற்பார்த்துமுனிவனுமிகழ்த்துவானால். (கங)

அத்தவுன்றுடல்காண்பான்விழைந்தனனருளாயென்னக்
கத்தனுமுறுவல்பூத்துக்காசறுதவத்தாய்கேட்டி
நத்துறுகரத்துமாலுநான்முகன்பிறருங்காணச்
சித்திரநடஞ்செய்கிறபோம்கயிலையிறசிறக்குமன்றோ. (கச)

ஆயிழையுமையாள்காணவருநடக்குயிற்றிப்பின்ன
ரேயுநற்கருமமல்லாற்பிரமம்வேறில்லையெனறே
வாயுரைபகர்ந்ததேவதாருமாவனத்தாநாணப்
பேயவர்செருக்கைமாற்றிப்புனிதமாநடஞ்செய்தேமால். (கரு)

அண்டருமுனிவரபோற்றுமருந்திறற்பதஞ்சலிப்பேர்
ஒண்டவனபுலிக்காலுள்ளோனுலகெலாம்வணங்கியேத்த
வெண்டருதில்லைவாழ்மூவாயிரமுனிவரேனோர்
கண்டிடமன்றனின்றுகவினுறநடிப்பன்காண்டி. (கசு)

வழுதிடனுட்டில்வெள்ளிமன்றினிலமாறியாடிப்
பழுதறுவடவாரண்யமுதறபலதலத்தும்பாங்கிற்
செழுதிடுமன்பருள்ளக்கமலமாம்பொருட்டிற்றேய்ந்து
பழுதறநடஞ்செய்கிற்போம்பாதகர்பார்க்கொணாதால். (கஎ)

யாமசைத்திடினலாதோரணுவுமிங்கசையாவுண்மை
தோமறவுணர்ந்தயாண்டுமருளினிறதேய்ந்தசிற்போர்
தாமுணர்ந்திடுவாசின்றுளீண்டுநீதவஞ்செய்கிறபிற்
காமுறுநடத்தின்காட்சியளிக்குதுங்காண்பையெனறான். (கஅ)

என்றிறைகழறிப்போகவிறைஞ்சியேமுனிவனுண்டுச்
சென்றருந்தவத்தினின்றான்சழிந்தனசின்னாட்பின்னர்க்
கொன்றையஞ்சடையெம்மண்ணல்நந்தியைக்குனிரநோக்கிச்
சென்றெருசவைசெய்கிற்பாய்கறைசையிற்சிறக்கவென்றான். (க௯).

வேறு. என்றநன்மொழியேற்றுடன்
சென்றுவானுறுசிற்பியை
யின்றுமாகுடக்கேகியோர்
மன்றுநீபுரிவாயென்றான்.

நந்தியானைநன்கேற்றுடன்
வந்துதேவகம்மாளனும்
சிந்தைசெய்தனன்றேர்ந்துபின்
றரதனன்னொருதன்சபை. (௨௧)

வையம்வாழ்பவர்வாழ்த்தவே
பையராவுமிழ்பன்மணி
செய்யபொன்கொடுசெய்துதன்
கையின்வணமையுங்காட்டினான். (௨௨)

கோட்டுப்பூகொடிப்பூபுனல்
நீட்டுப்பூநிலப்பூவொடும்
பாட்டுதேன்சுழல்பஃறொடை
நாற்றிக்கெங்கணுநாற்றினான். (௨௩)

கன்னல்முதலொடுகாகடல்
தன்னுமுதமுஞ்சோதிசெய்
செந்நெல்முதலொடுசேரவே
மன்னுமாலைகளமாட்டினான். (௨௪)

சந்தனத்தொடுதண்ணகில்
வந்தனத்தொடுவாரிவந்
தந்தநற்பொனியார்வமாய்த்
தந்திடக்கொடுசாத்தினான். (௨௫)

வேறு. இன்னணம்பலசிறப்பொடுமண்டபமியற்றி
மன்னுநந்திபாலுரைத்திடவவனுளமகிழ்ந்தே
என்னையாளுடையான்றிருமுன்புவந்திசைத்தான்
பொன்னினீள்சடைப்புனிதனுமெழுந்தனன்போந்தான். (௨௬)

போந்தபோதயன்மான்முதற்புங்கவர்புடைசூழ்ந்
தேந்துகையினராகியேபோற்றியென்றிசைக்க
வாய்ந்தபாரதியாதியின்மாதருமகிழ்ந்தே
யாய்ந்தமங்கலம்பாடினர்மலர்சொரிந்தார்த்தார். (௨௭)

எண்ணருந்தவமியற்றினுமெய்திடற்கரிதாங்
கண்ணுதற்பரன்றிருநடக்காட்சியின்றெனியேம்
நண்ணுமாறருள்கூட்டியதென்னைமேனுனியாம்
பண்ணுமாதவம்யாதெனமகிழ்ந்தனர்பணிந்தார். (௨௮)

வேத்திரப்படைகைக்கொடுநந்தியாம்விமலன்
சோத்துமிண்டியசனத்திரள்விலக்கிமுன்செல்ல
வாத்தியத்திரள்கடலெனவொலித்திடமருங்கிற்
சாய்த்தசாமரைகொடிகுடையாதிகள்சரிக்க. (௨௯)

வித்தையாயொளிர்நடனரங்கத்தினின்விமலன்
வந்துமாதவரானந்தவருவிகண்வடிக்க
நந்திமாயனுமுழவமுன்முழக்கநான்முகவன்
செந்தகைக்கரத்தேந்தியதாளமும்சிறக்க. (௩௦)

வாயுவின்னிசைகூட்டிடவானவர்கோமான்
ஏயுநன்முகவீணையையியக்கிடவெழில்சேர்
தூயதும்புருநாரதர்யாழிசைதொனிக்க
வாயுமாநடம்புரிந்திடவிசைந்தனனமலன். (௩௧)

வேறு. கில்லகிலதிகில்லகிலதியென்றுகிளாநன்னடனம்
பல்லவுயிரினுள்ளமதனிலுள்ளமலங்கள்பாற்றும்
சல்லசலதிசல்லசலதிசந்தமலிநன்னடனம்
வல்லவடியரல்லல்துலையவாட்டிவினைகளோட்டும். (௩௨)

கங்கணமிதிகங்கணமிதியெனறுசவின்செய்நடனம்
சங்கரனருளபொங்குமடியர்தங்கள்வினைகள்சாய்க்கும்
மங்களமிதிமங்களமிதியெனனமகிழ்செய்நடனஞ்
செங்கணரியின்பமும்நாணவுயருமவாழ்விறசேர்க்கும். (௩௩)

தத்துவமிதிதத்துவமிதியென்றசரதநடனம்
பததர்கள்வினையறிடவுயர்பததிறசந்ததமேற்றும்
திததிமிதிமிதிந்திமிதிமியென்றுதிகழுநாட்யம்
புத்தமுதயிலதத்திசுதாபுகழும்பததிறகூட்டும். (௩௪)

வேறு. அத்தியையுரித்தோனுடலத்தியிற்றுயில்வோனாதி
விததசததேவாசித்தாமுனிவராவிழைந்துநோக்கிப்
புத்தமுதயின்றாபோலுமமெய்ம்மயிர்பொடிப்பவாங்கே
அத்தியம்புரிந்தானந்தவாரிகண்சொரிந்திட்டாரால். (௩௫)

மங்கையோர்பாகாபோற்றிமதனுடலெரித்தாய்போற்றி
செங்கையினமழுவாய்போற்றிதிரிபுரமழித்தாய்போற்றி
எங்கள்சங்கரசேபோற்றியீசனேயெந்தாய்போற்றி
சங்கராயோற்றிபோற்றிசயநடம்போற்றிபோற்றி. (௩௬)

என்றுயர்பரத்வாசப்பேர்முனியுடனேனோர்யாரும்
நன்றுறப்போற்றிநின்றூநம்பனுமகிழ்ந்துநோக்கி
மன்றினன்னடங்கண்டேய்ந்திவரமெலாமளித்தேம்யாண்டும்
பொன்றருகொடுமுடிப்போத்தலத்தியல்புகலற்பாற்றே. (௩எ)

இத்தலந்தன்னினீவிரியாவருமெந்தாட்பூசை
பத்தியிற்புரிந்துமுத்திப்பதத்தினிதடைகபூமே
லெத்தலன்காணோரேனுமித்தலமொருகாலெண்ணின்
முத்தியைப்பெறுவாயாண்டுமியாமருள்முகிழ்ப்பேமன்றே. (௩அ)

கம்மடிபரசும்பாரத்துவாசனாநல்லோன்றெட்ட
பொன்மலர்த்தடத்துமூழ்குமபுனிதாமும்மலமுமபோக்கி
யம்மலரவற்குமெட்டாநம்பததடைவரென்று
செம்மையிற்புகனறிலிங்கதருவினிறநிகழ்நதானமாதோ. (௩௯)

மாதவர்வானோர்நின்றுவாழ்த்தினர்வாழ்ந்தார்வானி
லாதவன்மேடராசியடைநதிடுமதியநதனனில்
ஆதிரைபொருந்தும்வில்லிலைப்பசியாடிதன்னிற
கோதறுமற்றைநாளிறகொடுமுடிகுறுகிமன்றே. (௪0)

தீம்புனல்சூடைந்தெம்பெம்மான்சேவடிவழுத்திபோவார்
கூம்புகைமுனிவர்பல்லோரினிதினங்குறைவர்கூடி
நாம்பலவுகஞ்சொறற்றூலுமுற்றுமோநம்பனசீர்த்தி
யோம்புநற்றவத்தீரென்றுசூதனங்குரைத்திட்டானல். (௪௧)

உரைத்தவிக்காதைமுற்றுங்கேட்டனருவகைபூப்ப
விரைத்தபன்மலர்கொண்டெம்மான்சேவடிவிரும்பிப்போற்றிப்
புரைத்தவல்வினையைச்செற்றுவாழ்ந்தனர்புளகங்கொண்டார
தரைக்கணிக்காதைமுற்றுங்கேட்பவர்தாழ்விலாரே. (௪௨)

வாழ்கவாழ்கநங்கொடுமுடிப்பரமனன்மலர்த்தாள்
வாழ்கவனனவன்வலத்துவாழ்வடிவுடையிறைவி
வாழ்கமாமறையந்தணர்வேள்விவான்பொழிந்து
வாழ்கவானிறையுயிரெலாமகிழ்வொடுமாதோ. (௪௩)

திருச்சிற்றம்பலம்.

பாரத்துவாஜச்சருக்கம் முற்றிற்று

(ஆகச்செய்யுள் அ௧௧)

# திருப்பாண்டிக்கொடுமுடிப்புராணம்

## முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஸ்ரீ திருப்பாண்டிக்கொடுமுடி ஸ்தலபுராணத்திற்குக் கையொப்பம் செய்தவர்களின் பெயர் விபரம்.

| நெம்பர். | ஊரும் பெயரும். | புஸ்தக விபரம். |
|---|---|---|
| 1 | கொடுமுடி சந்திரசேகரபண்டித சிவாசாரியர் ... | 10 |
| 2 | ,, கண்டிபட்ட வேதாந்த பண்டித சிவாசாரியர் ... | 10 |
| 3 | ,, சே. சூரியநாராயண அய்யர் ... | 1 |
| 4 | ,, அ. வெங்கடசுப்பய்யர் ... | 1 |
| 5 | ,, சுப்பராய தீக்ஷதர் .. | 1 |
| 6 | ,, அனந்தராம தீக்ஷதர் .. | 1 |
| 7 | ,, பெ. மகுடேசுவரய்யர் ... | 1 |
| 8 | ,, வைத்தியம் விஸ்வநாதய்யர் ... | 1 |
| 9 | ,, சி. இராமசுவாமி அய்யர் ... | 1 |
| 10 | ,, திருவாங்கூர் சர்க்கார் ஏஜண்டு வி. எஸ். இராமசாமி அய்யர் ... | 5 |
| 11 | ,, ரா. எஸ். இராமகிருஷ்ணய்யர் ... | 1 |
| 12 | ,, ச. சுப்பராய அய்யர் ... | 1 |
| 13 | ,, பாரூர் இராமய்யர் ... | 1 |
| 14 | ,, தேவஸ்தான மணியம் வெங்கடரமண ஆச்சார் ... | 1 |

| நெம்பர். | ஊரும் பெயரும். | புஸ்தக விபரம். |
|---|---|---|
| 15 | கொடுமுடி செ. மு. மணியம் இராமசுவாமி அய்யர் ... | 1 |
| 16 | ,, சீ. இராமசேஷய்யா ... | 1 |
| 17 | ,, வே. சதாசிவ அய்யர் .. | 1 |
| 18 | ,, அ. சோமேசுவரய்யா ... | 1 |
| 19 | ,, மு. அ. வெங்கடசுப்பிரமணிய அய்யர் ... | 1 |
| 20 | ,, க. சுப்பராம அய்யா .. | 1 |
| 21 | ,, முன்சிப்புமணியம் லக்ஷ்மிநாராயணய்யர் ... | 1 |
| 22 | ,, இஸ்கூல் மாஸ்டா சுபபுசாமி அய்யா ... | 1 |
| 23 | ,, எம். வெங்கிட்டரமணய்யர் ... | 1 |
| 24 | ,, மு. நா. இராமசுவாமி அய்யா ... | 1 |
| 25 | ,, கே. சாமிநாதய்யா ... | 1 |
| 26 | ,, து. இராமகிருஷ்ணய்யர் ... | 1 |
| 27 | ,, வெ. சுப்பிரமணிய அய்யா ... | 1 |
| 28 | ,, அ. இராமசுபபிரமணிய அய்யர் ... | 1 |
| 29 | ,, காணம் வெங்கடரமணய்யர் ... | 1 |
| 30 | ,, செ. கர்ணம் கோபால கிருஷ்ணய்யர் ... | 1 |
| 31 | ,, அ. மலைக்கொழுந்து ஓதுவார் .. ... | 1 |
| 32 | ,, அ. மலையண்ண ஓதுவார் .. ... | 1 |

| நெம்பர். | ஊரும் பெயரும். | புஸ்தக விபரம். |
|---|---|---|
| 33 | கொடுமுடி காஸ்தவசந்தராய ஓதுவார் ... | 2 |
| 34 | ,, சுப்பிரமணிய ஓதுவார் ... | 5 |
| 35 | ,, காஸ்த சேனுபதி ஓதுவார் ... | 5 |
| 36 | ,, மு. வசந்தராய ஓதுவார் .. | 2 |
| 37 | ,, ம. குப்புசாமி ஓதுவார் ... | 1 |
| 38 | ,, ரா. வசநதராய ஓதுவாா .. | 1 |
| 39 | ,, ஷண்முக ஓதுவார் .. | 1 |
| 40 | ,, ரா. கச்சியபப ஓதுவாா .. | 1 |
| 41 | ,, க. முத்துசாமி பிள்ளை . | 1 |
| 42 | ,, மூலனூர்க் காளிபாளையம் கு.முத்துசாமிக்கவுண்டர் | 10 |
| 43 | சிவகிரி கிராமம் சின்னையகவுண்டம்பாளையம் வடமுகம் முன்சிபு மணியம் சி. செங்கோட்டுவேலப்ப கவுண்டர் வகையரா ... | 10 |
| 44 | ,, வேட்டுவபாளையம் தென்முகம் சானி மணியம்காசிலிங்க கவுண்டா வகையரா ... | 10 |
| 45 | வெ. வ. புதுப்பாளையம் ஆ. ந. சேங்கோடகவுண்டர் ... | 1 |
| 46 | கு. வேலாயுதம்பாளையம் காளியண்ண கவுண்டா ... | 2 |
| 47 | கொடுமுடி புதூர் க. பழனிமலைக் கவுண்டர் ... | 2 |
| 48 | கொடுமுடி மணியம் முத்துக்கருப்பண்ண கவுண்டர் ... | 10 |

| நெம்பர். | ஊரும் பெயரும். | | புஸ்தக விபரம். |
|---|---|---|---|
| 49 | ,, அ. கந்தசாமிககவுண்டர் | ... | 10 |
| 50 | ,, ம. இராமசாமிக் கவுண்டர் | ... | 2 |
| 51 | ,, சு. ஆறுமுகக் கவுண்டர் | ... | 10 |
| 52 | ,, வெ. மாரபப கவுணடா | ... | 10 |
| 53 | ,, முத்துக்காளியப்ப கவுண்டர் | ... | 1 |
| 54 | ,, சாமியாடி முததுக கவுணடா | .. | 3 |
| 55 | ,, பெ. ம. இராமசாமிக கவுண்டர் | ... | 3 |
| 56 | ,, பரமசிவக் கவுண்டர் | ... | 1 |
| 57 | ,, த. கருபபணண கவுணடர் | ... | 1 |
| 58 | ,, வெ. அங்கமுததுக்கவுண்டா | ... | 1 |
| 59 | ,, த. குப்புசாமிககவுண்டா | ... | 1 |
| 60 | புதுப்பாளையம் செ. பொன்னியாக்கவுண்டர் | ... | 1 |
| 61 | ,, ம. குப்புசாமிக்கவுண்டா | ... | 1 |
| 62 | ,, சி. க. மலையப்பகவுண்டர் | ... | 1 |
| 63 | ,, இலிங்கப்பகவுண்டா | ... | 1 |
| 64 | ,, க. பெரியணகவுண்டர் | ... | 1 |
| 65 | அரசம்பாளையம் நா. பெரியணகவுண்டர் | ... | 1 |
| 66 | ,, ம. கருப்பகவுண்டர். | .. | 1 |

| நெம்பர். | ஊரும் பெயரும் | | [illegible] |
|---|---|---|---|
| 67 | சிவகிரி செ. அங்கப்பசெட்டியார் | | 1 |
| 68 | ஏமகவுண்டனூர் க. பெரியாக்கிக்கவுண்டர் | | 5 |
| 69 | சினஞககவுண்டனூா பிரமாண்டக்கவுண்டர் | ... | 2 |
| 70 | கொடுமுடி ம தழுமபன்செட்டியாா | ... | 1 |
| 71 | ,, கு. சுபபண்ண செட்டியாா | ... | 1 |
| 72 | ,, கு. கறுபபண்ண செடடியாா | ... | 2 |
| 73 | ,, ம. இருளப்பசெட்டியாா | ... | 2 |
| 74 | ,, க. மாரியபபசெட்டியாா | .. | 1 |
| 75 | ,, மு. பெரிடண்ணசெட்டியார் | ... | 1 |
| 76 | ,, கா. ரா. சின்னபபசெட்டியார் | ... | 2 |
| 77 | ,, இராயவேனூா சு. முருகைப முதலியார் | ... | 1 |
| 78 | ,, ஷை வீராசாமி முதலியாா | ... | 1 |
| 79 | ,, வி பாலசாமி செட்டியார் | ... | 1 |
| 80 | ,, வி. முததுசாமி செட்டியாா | ... | 1 |
| 81 | ,, சி. வெங்கட்டப்ப செட்டியார் | ... | 1 |
| 82 | ,, சி. சுப்பய்ய செட்டியார் | ... | 1 |
| 83 | ,, அ. திருவேங்கிட செட்டியார் | ... | 1 |
| 84 | ஏமகவுண்டனூர் மாரிமுத்து செட்டியார் | ... | 1 |

| [illegible] | ஊரும் பெயரும். | புஸ்தக விபரம். |
|---|---|---|
| 85 | கொடுமுடி மா. சுப்பராய ஆசாரி | 1 |
| 86 | ,, க. சுப்பராய ஆசாரி .. | 1 |
| 87 | வெங்கம்பூர் வீரப்ப பிள்ளை .. | 1 |
| 88 | கொடுமுடி க. மாரிமுத்து ஆசாரி . | 1 |
| 89 | செ. புதுப்பாளையம் இ. சின்னப்ப ஆசாரி . | 1 |
| 90 | சோளக்காளிபாளையம் சுப்பசேர்வைகாரன . | 1 |
| 91 | கொடுமுடி நாகசுரம் அங்கமுத்து முதலி .. | 2 |
| 92 | ,, க. வரத முதலி .. | 2 |
| 93 | ,, வி. சுப்பிரமணிய முதலி .. | 2 |
| | ஆ | 206 |

PRINTED AT THE "LITERARY SUN" PRESS, COIMBATORE.